சிவானந்த சாதன வெளியீடு — 8.

ஓம்;

# ஸ்ரீ அஷ்டாக்ஷர தீபம்.



எழுதியவர்:
**ஸ்வாமி அத்வயானந்தர்,**
சிவானந்த சாதன நிலையம்,
ஈங்கோய். மணமேடு P. O.
(திருச்சி Dt.)

## முன்னுரை

மந்த்ரம் என்பது வடமொழிப்பதம்.

மந்=மனனம் செய்பவரை, த்ரம்=காப்பாற்று கின்றது. அதாவது ஒரு மனிதன் எந்த வாக்கியத்தை ஒருமையான மனதுடன் இடைவிடாமல் ஜெபித்து வந்தால் எல்லா இடையூறுகளிலிருந்தும் அவனைக் காப்பாற்றிவிடுமோ அந்த வாக்கியத்திற்கு மந்த்ரம் என்று பெயர். "ஜன்மம், ஔஷதங்கள், மந்த்ரங்கள், தபசுகள், அஷ்டாங்கயோக சமாதி ஆகியவைகள் சித்திகளை உண்டுபண்ணுகின்றன" என்று பதஞ்சலி பகவான் யோக சூத்திரத்தில் கூறியுள்ளார். ஆதலால் மந்த்ரத்தை நம்பிக்கையோடு ஜபம் செய்துவருவதனால் சர்வ சித்தியையும் அடையலாம். மந்திரத்தால் மாங்காய் விழுமா? என்று ஓர் பழமொழி தமிழ்நாட்டில் வழங்கி வருகிறது. அதற்கு மந்திர ஜபத்தினால் மரத்திலுள்ள மாங்காய் கீழே விழுந்துவிடுமா? கல்லால் அடித்தால்தான் விழும். என்று சிலர் தவறாக அர்த்தம் செய்து கொள்ளுகின்றார்கள். ஒரு காரியத்தைச் செய்து முடிக்க எண்ணிச் சிலர் சேர்ந்து இரகசியமாக விருந்து ஆராய்ச்சி செய்வதற்கும் மந்திரம் என்ற பெயர் உண்டு. ஒரு மாமரத்தில் காய் அறுக்கச் சென்று ஒன்று கூடிப் பேசிக்

கொண்டிருந்த சிலரில் ஒருவன் இப்படி மந்திரம் செய்வதனால் மாங்காய்கள் விழுந்துவிடுமா? அதை அறுப்பதற்கு வேண்டிய காரியத்தைச் செய்ய வேண்டும் என்று சொன்ன பழமொழியே அது.

மந்த்ர ஜெபத்தினால் பலனில்லையென்று கருதுகின்றவர்கள், தூரமான ஊரில் ஒருவனை நாகசர்ப்பந் தீண்டிவிட்டது என்று தந்தி தனக்கு வந்த மாத்திரத்தில் மந்த்ர ஜெபத்தினால் அந்த விஷத்தை நீக்கிவிடுவதையும்; தேள்கடி, பூரான் கடி முதலிய விஷங்களை மந்த்ரத்தால் இறக்கி விடுவதையும் மற்றவைகளையுங் கண்டு அவ்வெண்ணத்தை ஒழிப்பார்களாக.

மந்த்ரத்தின் சக்தியை அறிந்திருப்பதனாலேயே ஹிந்து மதத்தினரைப்போலவே கிறிஸ்து முகம்மது முதலிய எல்லா மதத்தினரும் மந்திரங்களைக் கையாளுகின்றார்கள். முற்காலத்தில் ஒருவனைக் கொல்லுவது, இறந்தவனை எழுப்புவது, இந்திர ஜாலம், மஹேந்திர ஜாலம் முதலியவற்றையெல்லாம் மந்திரத்தாலேயே செய்து வந்தார்கள். முற்காலத்து அரசர்களெல்லாம் மந்திர சக்தியாலேயே யுத்தங்களைச் செய்துவந்திருக்கின்றார்கள். சொற்பச் செலவில் மூங்கில் குச்சியின் நுனியில் கோர்க்கப்பட்ட ஓர் சிறிய இரும்புத் தகட்

டிற்கு, இக்காலத்தில் கோடிக்கணக்கான திரவியத்தால் செய்யப்படும் அணுகுண்டைப்போல ஆயிரம் மடங்கு சக்தியுண்டானதும், அக்னியாஸ்திரம், வருணாஸ்திரம், வாய்வஸ்திரம், சர்ப்பாஸ்திரம், கருடாஸ்திரம், பிரம்மாஸ்திரம், நாராயணாஸ்திரம் என்பன முதலிய பெயரெல்லாம் உண்டானதும் மந்திரத்தினாலேயே யல்லவா? சுருக்கமாகக் கூறினால் முற்காலத்தில் மந்திரமே உலக முழுவதையும் ஆண்டு வந்தது என்று கூறலாம். தண்டத்தில் அபிமந்திரித்து வைத்த மந்திரத்தின் சக்தியைக் கண்டல்லவா உலகை ஆண்ட விஸ்வாமித்திரர் பின் தபசியானார். அந்த மந்திர சக்தியினாலேயே அல்லவா பிறகு அவர் பிரம்மாவைப்போல் வேறு சிருஷ்டியும் செய்யத் தொடங்கிவிட்டார்.

ஆதலால் இக்காலத்திலுள்ளவர்களும் ஸ்ரீ பூமண்டல சத்குரு ஸ்வாமி சிவானந்த சரஸ்வதியவர்கள் சொல்வதுபோல் நம்பிக்கையோடு மந்திரங்களின் அர்த்தத்தையறிந்து ஜெபித்துச் சகல நன்மையையும் அடைவார்களாக!

மந்திரத்தை அதிகமாக உருப்போடுவதனால் மின்சார சக்திபோல் உடலில் ஒரு தெய்வீக சக்தி உண்டாகின்றது. அதனால் அவன் கைபட்ட மாத்திரத்தில் அல்லது அவன் உடுத்தியிருக்கும்

துணிபட்ட மாத்திரத்தில் அநேகருக்குப் பல வியாதிகள் நீங்குகின்றன. அவன் தொட்ட திருநீறு தண்ணீர் முதலியவையும் பல நோய்களை நீக்குகின்றன. அவன் உருட்டி விழித்த மாத்திரத்தில் சிலருக்குப் பிடித்திருக்கும் பேய் முதலியவை பறக்கின்றன. அவன் சொல்லுபவை பலிதமாகின்றன. உயர்ந்த மந்திரங்களை உச்சரிப்பவரிடம் பிறர் செய்யும் பில்லி சூனியங்கள் அணுகுவதில்லை. அவர்களுக்கு இறைவன் அருள் எளிதில் கிடைக்கின்றது. வாயினால் தீய சொற்களைப் பேசுவதனாலும், பிறர் நிந்தை செய்வதாலும், பிறரைத் தீய காரியங்களில் ஏவுவதாலும் உண்டாகும் பாபங்களும், தீய எண்ணங்களாலும், தீய காரியங்களாலும் உண்டாகும் பாபங்களும் ஆகிய மலமெல்லாம் மந்திர ஜெபத்தால் கழுவப்படுகின்றன. அவன் மனம் விக்ஷேபம் நீங்கி ஒரு மனப்படுகின்றது. சுருக்கமாகக் கூறினால் மந்திர ஜெபம் செய்பவர் மனிதரில் தேவராகின்றார்.

லிகித மந்த்ர நோட்டுப் புத்தகங்கள் யந்திரங்களைவிடச் சக்தியுடையனவாயிருக்கின்றன.

அஷ்டாக்ஷரம், பஞ்சாக்ஷரம், ஷடக்ஷரம் முதலிய மந்திரங்கள் உலகத்தில் சகல போகங்களையுங் கொடுத்து, ஈஸ்வரானுக்கிரகத்தையும்

உண்டுபண்ணி, மோக்ஷத்தையும் அடைவிப்பனவாம். அவற்றுள் ஸ்ரீ அஷ்டாக்ஷரத்தின் பொருளேயும் அதைக் கையாளும் முறையையும் இப்பொழுது காண்போம். இங்கு வடமொழி இலக்கணம் பயிலாதவர்கட்கும் தமிழ்ப் புலமையில்லாதவர்கட்கும் விளங்கும் முறையில் சுருக்க அளவிலேயே எழுதப்படுகின்றது.

**அத்வயானந்தம்.**

அஞ்சுமூணு மெட்டதாய் அநாதியான மந்திரம்
நெஞ்சுளே நினைந்துகொண்டு நூருருச் செபிப்பிரேல்
பஞ்சயான பாதகங்கள் நூறுகோடி செய்யினும்
பஞ்சுபோல் பறக்குமென்று நான்மறைகள் பன்னுமே

— சிவவாக்கியர்.

# ஸ்ரீ அஷ்டாக்ஷர தீபம்

---

## ஓம் நமோ நாராயணாய

என்பது எட்டெழுத்துள்ள மந்த்ரமாகும். ஆதலால் இதற்கு அஷ்டாக்ஷரம் என்று பெயர். அஷ்ட=எட்டு, அக்ஷரம்=எழுத்து. ஓம் என்பதிலுள்ள ம்—என்பது மெய்யெழுத்து ஆதலால் இதை ஓர் எழுத்து என்று கணக்கில் சேர்ப்பதில்லை. ஆகவே ஓம் என்பது ஓர் எழுத்து மந்திரமாம். இதற்கே பிரணவமென்றும், முக்தி பஞ்சாக்ஷர மென்றும், பிரணவ—சூக்ஷ்ம பஞ்சாக்ஷரி என்றும், சூக்ஷ்ம அஷ்டாக்ஷரமென்றும் பல பெயர்கள் உள்ளன. இம்மந்திரத்தின் விரிவான விளக்கத்தைப் பிறகு பிரணவ தீபத்தில் காண்போம். ஓம் என்பதனால் குறிக்கப்படும் பொருள் காரிய காரணங்களின்றிய சுத்தப் பிரம்மமாம். நமோ என்பதைப் பிரிக்கும்போது நம: என்று ஆகும். நம: என்பதை நமஹ என்பதுபோல் உச்சரிக்க வேண்டும். நம: என்பதற்கு நமஸ்காரம்—வணக்கம் என்று அர்த்தமாகும். நாராயணாய என்பதற்கு நாராயணனுக்கு என்று அர்த்தமாம். சிலர், பல கடவுள் இருக்கின்றார்கள் என்று எண்ணி

அக்கடவுளர்களுள் இவர் பெரியவர் இவர் சிறியவர் என்று கூறிச் சில கடவுளர்களையும் அக் கடவுள் பக்தர்களையும் நிந்திக்கின்றார்கள். இதனால் குளிக்கப் போய்ச் சேறு பூசிக்கொண்டதுபோல், பக்தி செய்யப்போய்ப் பாவ மூட்டை கட்டிக் கொள்ளுகின்றார்கள். ஆதலால், பெயரும் உருவமும் இன்றிய ஒரே கடவுளே உள்ளார் என்றும், அவருக்கே ஆயிரக் கணக்கான உருவங்களும் ஆயிரக் கணக்கான பெயர்களும் உள்ளன என்றும் திடமாக உறுதி கொள்ளவேண்டும். எதைப் பரமசிவம் என்று சைவர்கள் கூறுகின்றார்களோ, யாரை மஹா விஷ்ணுவென்று வைஷ்ணவரும், பிரம்மம் என்று பிரம்ம ஞானிகளும், அல்லாவென்று முகம்மதியரும், சர்வேஸ்வரனென்று கிறிஸ்தவர்களும் கூறுகின்றார்களோ, முருகர், கணேசர், அம்பிகை என்றெல்லாம் பலவிதமாக யாரைச் சொல்கின்றார்களோ அவரே நாராயணராம். நாராயணரே சகல அண்டங்களையும் படைத்துக், காத்து, அழித்து, மறைத்து, அருளியும் ஒரு தொழிலும் இல்லாதவராய் இருக்கின்றார். நாராயணாய என்பதற்கு இத்தகைய நாராயணருக்கு என்றே அர்த்தமாம். சிலர் எண்ணுகின்ற படி ஜீவர்களில் ஒருவராய் இருக்கின்ற நாராயணனுக்கு என்ற அர்த்தமின்று. ஆகவே அஷ்டாக்ஷரத்திற்குச் சாதாரண அர்த்தம்:— ஓம்=சுத்தப்

பிரம்மமாகவே யிருக்கின்ற, நாராயணாய—நாரா யனருக்கு, நம:=நமஸ்காரம் என்பதாம். பரமேஸ் வரனுடைய நாமங்களில் நாராயண என்னும் நாமம் மஹா மஹிமை பொருந்திய மந்திரமாம். திரிபாத் விபூதி மஹாநாராயணோபநிஷத், சுபா லோபநிஷத், இரண்டு நாராயணோபநிஷத்துக்கள் முதலிய பல உபநிஷத்துக்கள் நாராயணரின் பெருமையைக் கூறுகின்றன.

ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யர் நாராயண மந்த்ரத்திற்கு அர்த்தம் கூறும் விதமாவது:—

"நர என்ற சொல் நார என்ருகி அதனேடு அயந என்ற சொல் சேர்ந்து நாராயண என்று ஆகியிருக்கின்றது. நர என்ருல் ஆத்மா, அதி னின்று உண்டான ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், மண், தாவரங்கள், மற்றப் பிராணிகளின் சரீரங் கள், சூரியன், சந்திரன் முதலிய காரியப் பொருள் களெல்லாம் நார என்று சொல்லப்படுகின்றன. அயந என்ருல் இடம் ஆகும். ஆதலால் நாரங்க ளெல்லாம் உண்டாவதற்கு எந்த ஆத்மா அதாவது பரம்பொருள் இடமாக இருக்கின்றதோ அந்தப் பரம்பொருள் நாராயண என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றது. அல்லது நாரங்களெல்லாம் எவருக்கு இடமாக இருக்கின்றனவோ அவர்

நாராயணராம். சேலைக்கு நூல் முதற் காரணம், ஆதலால் நூல் சேலை முழுவதும் இருக்கின்றது. அதுபோல கடவுள் எல்லாக் காரியங்களுக்கும் முதற் காரணமாம். ஆதலால் அவர் எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றார். அதனால் அவருக்கு நாராயணர் என்னும் பெயர் வந்தது.

நாராயண உபநிஷத்திலுள்ள மந்திரத்தில் "காணப்படுவதும், கேட்கப்படுவதும், உள்ளேயுள்ளதும், வெளியேயுள்ளதுமாக எங்கெந்தப் பொருள்கள் இருக்கின்றனவோ அவை எல்லாவற்றிலும் எல்லா உலகங்களிலும் நிறைந்து நாராயணர் இருக்கின்றார்." என்று கூறப்பட்டுள்ளது.

மஹா பாரதத்தில் "தத்துவங்களெல்லாவற்றிற்கும் நாரங்கள் என்று பெயராம். அவையெல்லாம் அவருக்கு இடமாக இருப்பதனால் அவர் நாராயணரென்று கருதப்படுகின்றார்" என்று கூறப்பட்டுள்ளது.

"நார என்றால் ஜீவன், அயனம்=இடம். பிரளயத்தில் எல்லா ஜீவர்களும் அவரிடத்தில் ஒடுங்குகின்றபடியால் அவருக்கு நாராயணரென்று பெயராகும்." இவ்விதமாகவே பிரம்ம வைவர்த்த புராணம் கூறுகின்றது.

தைத்திரீய உபநிஷத்தில், "எல்லா ஜீவர்களும் பிரளயத்தில் இவரிடத்திலேயே ஒடுங்குகின்றன." என்று கூறப்பட்டுள்ளது.

"நர என்னும் பரமாத்மாவினிடமிருந்து உண்டானதால் தண்ணீருக்கு நாரம் என்று பெயராம். இந்த நாரமே பூமிக்கு முதலில் உண்டானது. ஆதலால் நாரமே முன்பு இவருக்கு அயந (இட)மாக இருந்தது. அதனால் அவர் நாராயணரென்று கருதப்படுகின்றார்." என்று மனுபகவான் ஸ்மிருதியில் கூறியுள்ளார்.

ஸ்ரீ நாரசிம்ம புராணத்தில் "நல்ல புத்தியும், ஆசையின்மையும் உடைய யதிகளே! கேளுங்கள். நான் கையை உயரத் தூக்கிக்கொண்டு மிகவும் உரத்த குரலால் உபதேசிக்கின்றேன். நாராயணாய நம: என்பதுவே சம்சாரமென்னும் சர்ப்பத்தின் கோரமான விஷத்தைக் கெடுத்து ஒழிக்கக்கூடிய சத்தியமான மந்த்ரமாகும்" என்று சொல்லப்பட்டுள்ளது. இவ்விதமாக விஷ்ணுசகஸ்ரநாம பாஷ்யத்தில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் சாற்றியிருக்கின்றார்.

சிவஞான போதத்திற்குப் பாடியம் இயற்றியுள்ள சிவஞான முனிவரும் "நர என்றது நார என்றாகிப் பிறகு நாராய் என்றாகிப் பின் நாராயந என்றாகிக் கடைசியாக நாராயண என்றாகியுள்ளதால்

உயிர்த் தொகுதியை ஒத்து நிற்பவன் என்னும் பொருளுடையதாய்ப் பரமசிவனையே நாராயணனென்னும் பெயர் குறிக்கும்" என்று கூறுகின்றார்.

உண்மையை யுணர்ந்த வைஷ்ணவ கோஷ்டிகளும், நாராயணனைப் பரம்பொருளாகக் கூறும் எல்லா உபநிஷத்துக்களும், விஷ்ணு புராணங்களும் அந்தப் பரமசிவனையே நாராயணனென்று கூறுகின்றன. உண்மையை யறிந்த சைவ சமுதாயமும், சிவனைப்பரம்பொருளாகக் கூறும் உபநிஷத்துக்களும் சிவ புராணங்களும் அந்த நாராயணரையே சிவனென்று கூறுகின்றன. உண்மையுணராதவர்களே வேறு வேறென்றெண்ணி மயங்குவார்கள்.

நாம் ஒரு விக்ரஹத்தையாவது படத்தையாவது வைத்துக்கொண்டு அர்ச்சனை செய்யும்போது:—

நமோ என்ற பதத்தைக் கடைசியில் சேர்த்துக்கொள்ளவேண்டும். இப்பதம் முதலிலிருந்தாலும் கடைசியிலிருந்தாலும் அர்த்தம் மாறுபடாமல் ஒன்றாகவே இருக்கும். கடைசியில் சேர்த்தால், ஓம் நாராயணாய நம: என்று ஆகும். நாராயண என்னும் பதத்துடன் ய என்னும் வேற்றுமை உருபு சேரும்போது நாராயணாய என்று ஆகின்றது. ஆதலால் இந்த மந்திரத்தை ஓம், நாராயண, ய, நம: என்று

நான்கு பாகமாகப் பிரிக்கலாம். ஓம் என்பது எல்லாப் பொருளையும் கொடுக்கக் கூடிய எல்லா மந்த்ரங்களுக்கும் முதலில் சொல்லவேண்டிய முதல் மந்த்ரமாகும். இதை முதலில் சொல்வதால் எண்ணிய எண்ணமெல்லாம் இடையூறென்றுமில்லாமல் கைகூடும். நாராயண என்பதற்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களும் பொருளாம். ய என்பதற்குப் பலன் அதாவது அடையும் பொருட்டு என்பது பொருளாம். நம: என்பதற்கு தியாகம் அதாவது விடுகிறேன் அல்லது அர்ச்சனை செய்கின்றேன் என்பது பொருளாம். ஆகவே ஓம் நாராயணாய நம: என்பதற்கு இடையூறு ஒன்றுமில்லாமல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பேறுகளையும் அடையும் பொருட்டு (இந்தத் துளசி, புஷ்பம் முதலியவைகளைக் கடவுளாகிய தங்கள் பாதத்தில்) அர்ச்சிக்கின்றேன் என்பது பொருளாகும்.

ம: என்பதற்கு என்னுடையது என்று பொருளாம். ந என்பதற்கு இல்லை என்று அர்த்தமாம். ஆகவே நம: என்பதற்கு என்னுடையதன்று என்பது பொருளாகின்றது. அதாவது என் கையில் கிடைத்த இந்த வாசனைத் திரவியங்கள், புஷ்பங்கள், பத்ரங்கள், பழங்கள், மற்றுமுள்ள நைவேத்தியங்கள் ஆகிய எல்லாம் என்னுடையன அல்ல. எல்லாம் தங்களுடையனவே. ஆதலால் இவை எல்லாவற்றையும்

தங்களிடம் சமர்ப்பிக்கின்றேன் என்பது பொருளாகின்றது.

புண்ணியத்தையாவது, மாலை, வாசனைத் திரவியங்கள், அழகிய மனைவி, அழகிய புருடன், மக்கள், வீடு, பூமி, பசு, வாகனங்கள், பொன், இரத்தினம் முதலிய பொருள்களையாவது, இந்த உலகத்திலும் சுவர்க்கலோகத்திலும் உள்ள பதவிகளையாவது, இன்பங்களையாவது விரும்புகின்றவர்கள் இவ்விதமாக எண்ணிப் பூசை செய்யவேண்டும்.

வீடு என்னும் மோக்ஷத்தையடைய விரும்புகின்றவர்கள் துளசி, புஷ்பம் முதலியவைகளால் அர்ச்சனை செய்யும்போது தமது புத்தி முதலிய அந்தக்கரணங்களையும், இந்திரியங்களையும், பிராணன்களையும், உடம்பையும் கடவுள் திருப்பாதத்தில் சமர்ப்பிப்பதாகக் கருதவேண்டும்.

அல்லது நம: என்பதற்குக் கடவுளாகிய தாங்களல்லாத உடல், பொருள், உயிர் முதலிய எல்லாப் பிரபஞ்சத்தையும் எனது ஆன்மாவல்ல என்று விலக்கி விடுகின்றேன் என்பது பொருள். எனது ஆன்மா தாங்களே. மற்ற எல்லாம் கனவில் காணப்படும் பொருள்கள்போல பொய்யானவையே என்பது கருத்து.

நமஸ்காரம் செய்யும்போது:—

நம: என்பதற்கு நமஸ்காரம் அதாவது வணக்கம் என்பது பொருளாம். நாராயணாய என்பதற்குப் பக்தி, புத்தி, சித்தி, முக்தி என்பவைகளை அடையும் பொருட்டு என்று அர்த்தமாம். ஆகவே ஓம் நமோ நாராயணாய என்பதற்கு ஓம் என்னும் பெயரை யுடைய எ பரமாத்மாவே! எனக்கு உண்மையான பக்தி, மேலான புத்தி, நான் விரும்புகின்றவற்றின் சித்தி என்பவைகள் உண்டாகும் பொருட்டு ஆசை யோடு அதாவது காம்யமாய் வணங்குகின்றேன். அல் லது முக்தியையடையும் பொருட்டு வேறு ஒரு ஆசை யுமின்றி அதாவது நிஷ்காம்யமாய் நமஸ்காரம் செய் கின்றேன் என்பது பொருளாகும்.

அல்லது ம: என்றால் விகாரம், ந என்றால் இல்லை. ஆதலால் நம: விகாரமில்லாதவர். நாராயணாய என்பதை நாராயணா, அய என்று இரண்டாகப் பிரிக்கலாம். அப்போது, ஓம் = ஓம் என்ற பெயருடை யவரே! நம: = விகாரம் அதாவது மாறுபாடு இல்லாத வரே! நாராயணா — நாராயணரே! அய = (என்னைக் காக்கும் பொருட்டு என்னிடம்) வருவீராக. என்று பொருளாகின்றது.

தியானம் செய்யும்போது:—

நாராயண என்பதற்கு உலகைப் படைக்கும் சரஸ்வதியோடு கூடிய பிரம்மா வென்றும், உலகைக் காக்கும் இலக்குமியோடு கூடிய விஷ்ணுவென்றும், உலகை ஒடுக்கும் ருத்ராணியோடு கூடிய ருத்ரனென்றும், இவ்வாறு எல்லாத் தேவர்களும் பொருளாவார்கள். ய என்பதற்கு தங்களோடு ஒன்றுகச்சேரும் பொருட்டு என்று பொருளாம். நம: என்பதற்குத் தியானம் செய்கிறேன் என்று பொருளாம். ஆதலால் கணேசத் தியானம் செய்பவர்கள், ஓம்=பரம்பொருளின் தோற்றவடிவமாகிய, நாராயணுய=வல்லபையோடுகூடிய கணேசராகிய தங்களை அடையும் பொருட்டு, நம:=தங்களைத் தியானம் செய்கின்றேன். என்றும், முருகரைத் தியானம் செய்பவர், ஓம்= பரம்பொருளின் தோற்ற வடிவமாகிய, நாராயணுய= முருகராகிய தங்களை அடையும் பொருட்டு, நம:= தியானம் செய்கின்றேன். என்றும், இவ்வாறு அவரவர் உபாசன மூர்த்தியை நினைத்துத் தங்களை அடைந்து தங்களோடு ஒன்றுகும் பொருட்டுத் தங்களைத் தியானம் செய்கின்றேன். என்னும் அர்த்தத்தைச் சிந்தித்து ஓம் நமோ நாராயணுய என்னும் மந்திரத்தை உச்சரித்துத் தியானம் செய்யலாம்.

நாராயண என்பதற்கு ஒரு உருவமும் ஒரு செய்கையும் இல்லாத சுத்தப் பிரமமும் பொருளாம். ஆதலால் கைவல்ய மோக்ஷமடைய விரும்புகின்றவர்கள், ஓம் = ஓம் என்னும் பெயரையுடைய, நாராயணாய = சுத்தப் பிரம்மத்தையடையும் பொருட்டு, நம: = தியானம் செய்கின்றேன் என்னும் அர்த்தத்துடன் தியானம் செய்வார்களாக.

மா என்பதற்கு லக்ஷ்மி என்று அர்த்தமாம். ந என்றால் இல்லை என்பதாம். அவற்றைத் திருப்பி நம: என்றால் லக்ஷ்மி இல்லாதவன் என்றர்த்தமாகின்றது. ஆகவே, நம: = லக்ஷ்மி இல்லாதவனாகிய நான், நாராயணாய = லக்ஷ்மி நாயகராகிய தங்களை அடையும் பொருட்டு, ஓம் = ஓம் என்று தியானிக்கின்றேன். என்று பொருளாம்.

மா என்பது மாயையின் பெயராம். ந என்றால் இல்லை. அதைத் திருப்பினால் நம: = அதாவது மாயையில்லாதவன். ஆதலால் (மாயையைக் கடக்க விரும்பிய அடியேன்) நாராயணாய = நாராயணராகிய தங்களை அடையும் பொருட்டு (தியானிக்கின்றேன் ஏனென்றால் தாங்கள்) நம: = மாயையில்லாத, ஓம் = ஓம் என்னும் பொருளாயிருக்கின்றீர்கள். என்றும் அர்த்தமாகிறது.

ஓம் என்பது போன்றே நம: என்பதும் பிரம் மத்தின் பெயராம். நாராயணாய என்பது நாராயண, அய என்று இரண்டாகப் பிரிக்கப்படும். ஆதலால், நாராயண = ஏ நாராயணரே! (தாங்கள்) நம: = பிரம் மமாயிருக்கின்றீர்கள் (ஆதலால் நான்) ஓம் = பிரம் மமாகிய தங்களை, அய = அடையும்படி செய்வீராக. என்றும் அர்த்தமாகிறது.

வியாகரணத்தின் (வடமொழி இலக்கணத் தின்) முறைப்படி அஷ்டாக்ஷரமானது இவ்வாறு இன்னும் அநேக அர்த்தங்களையுடையதாய்க் காணப் படுகின்றது.

வேதங்களின் முடிவாயுள்ளவை உபநிஷத்துக் களாம். உபநிஷத்துக்களின் முடிவாயுள்ளவை நான்கு மஹா வாக்கியங்களாம். அந்த மஹா வாக்கியங்களின் அர்த்தத்தையும் அஷ்டாக்ஷரம் உடையதாய் இருக் கின்றது. அஃதெப்படியெனில்,

நாராயண என்னும் பதத்திற்கு ஈஸ்வரன் அர்த்தமாம். ய என்பதற்கு ஜீவன் அர்த்தமாம். நம: என்பதற்கு ஐக்கியம் அர்த்தமாம். ஆகவே, நாரா யணாய நம: என்பதற்கு ஈஸ்வரனே ஜீவனாக வேறுபா டில்லாமல் இருக்கின்றார். என்று அர்த்தமாகின்றது. இவ்வாறு ஜீவனும் ஈஸ்வரனும் ஒன்றாகும்போது

சுத்தமான பிரம்மமே உள்ளது என்பதை ஓம் என்ற சொல் குறிக்கின்றது. இதுவே மஹா வாக்கியங்களின் முடிந்த பொருளாம்.

ருக் வேதத்தின் முதற் பாதத்தில்:—

"ஓம் நமோ நாராயணுய என்பது தாரக மந்திரமாம். அதாவது சம்சாரமென்னும் கடலைத் தாண்டுவித்து மோக்ஷத்தை அடைவிப்பதாம். இம்மந்திரமே சித்தாகிய பிரம்மத்தின் வடிவாம் என்று உபாசிக்க வேண்டும். இன்னும் இம்மந்திரத்தின் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு வடிவத்தையுடையது. அதாவது, ஓம் என்பது பிரம்மா ஆகின்றது. ந என்பது விஷ்ணுவாகின்றது. மோ என்பது ருத்திரன் ஆகின்றது. நா என்பது ஈஸ்வரனும். ரா அண்டவிராட்டு ஆகின்றது. ய என்பது புருஷனுகின்றது. ணு பகவானுகின்றது. ய பரமாத்மா ஆகின்றது. ஆதலால் இந்த நாராயண அஷ்டாக்ஷரம் பரம புருஷன் ஆகின்றது. இதுவுமன்றி ஓம் என்னும் ஏகாக்ஷரம் ஆத்மாவாம். நம: என்ற இரண்டக்ஷரம் பிரகிருதியாம், நாராயணுய என்னும் பஞ்சாக்ஷரம் பரப்பிரம்ம சொரூபமாம். என்று இவ்வாறு எவன் அறிகின்ருனே அவன் அமிருதனுகின்ருன்." என்று சொல்லப்பட்டுள்ளது.

நாராயணரே ஒரு தோஷமுமில்லாத எல்லா குணங்களும் நிறைந்த இறைவனாகும். ஏனென்றால், நாரங்கள் என்றால் தோஷங்களெல்லாம் நீங்கிய நல்ல குணங்களாம். அயனம் என்றால் இடமாம். ஆகவே நாராயணன் என்றால் தோஷங்களெல்லாம் நீங்கிய நல்ல குணங்களுக்கு இருப்பிடமானவன் என்று அர்த்தமாகின்றது.

நாராயண மந்திரத்தால் சகல பாபங்களும் நீங்குகின்றன. ஏனெனில் நாரங்கள் என்றால் செய்த பாபங்களாம். அயனம் என்றால் செல்லுதலாம். ஆகவே எவரை நினைத்த மாத்திரத்தில் செய்த எல்லாப் பாபங்களும் நீங்கி விடுகின்றனவோ அவரே நாராயணராம்.

மேலும், நரன் என்னும் பெயருடைய மனிதன் செய்யும் தர்மத்திற்கு நாரம் என்று பெயராம். அயனம் என்றால் வழியாகும். ஆகவே தன்னையடைவதற்கு மனிதன் செய்யும் தர்மத்தையே வழியாக உடையவனுக்கு நாராயணனென்று பெயராம். இத்தகைய நாராயணருடைய மந்திரமே இந்த அஷ்டாக்ஷரமாம்.

இவ்வாறு மகாமகிமை பொருந்திய அஷ்டாக்ஷர மஹா மந்திரத்தின் பெருமையையும் பலனையும் ஆழ்வார்களெல்லாம் மிகுதியாகக் கூறியிருக்

கின்றார்கள். அவர்களில் ஒருவராகிய திருமங்கை ஆழ்வார்:—

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
    படுதுயர் ஆயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும் பருளும்
    அருளொடு பெருநிலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
    தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
    நாராயணா என்னும் நாமம்.

என்று பாடியுள்ளார்.

மந்திரங்களை உரத்து உச்சரிப்பதைவிட மெதுவாக உச்சரிப்பது நூறு மடங்கு அதிக பலன் தருவதாகும். அதைவிட மனதிலேயே ஜெபிப்பது ஆயிரம் மடங்கு அதிகமாகும். மனதிலேயே ஜெபித்துக்கொண்டு எழுதுகின்ற லிகிதமந்த்ர ஜெபத்திற்கு அதைவிட மிகுந்த பலனுண்டாகும்.

அஷ்டாக்ஷரத்தை எட்டு லக்ஷம் உரு ஜெபித்தால் ஒரு புரஸ்சரணம் என்று சொல்லப்படும். ஒரு புரஸ்சரணத்திற்கு ஒரு ஹோமம் செய்வது நலம். ஹோமம் செய்யும் விதத்தை புரஸ்சரண ஹோமவிதி என்னும் நமது நிலைய வெளியீட்டில் காணலாம். இம்மாதிரி பதினுன்குகோடி உரு ஆனல் ஸ்ரீமந் நாராயணர் பிரத்தியக்ஷமாவார்.

சந்நியாசிகளை நாராயண வடிவமாகப் பார்க்க வேண்டுமென்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஆதலால் இதை அறிந்தவர்கள் சந்நியாசிகளைக் கண்டவுடன், ஓம் நமோ நாராயணுய என்று சொல்லிக் கும்பிடுகின்ருர்கள்.

மனிதர்களைக் கும்பிடும்போது அவர்களைக் கும்பிடுகிரும் என்ற எண்ணமில்லாமல் அவர்களிடமுள்ள கடவுளையே கும்பிடுகின்ரும் என்ற எண்ணத்துடனேயே கும்பிடவேண்டும். மனிதனுக்கு நரன் என்றும் மனித சமூகத்திற்கு நாரம் என்றும் பெயராம். அயனம் என்ருல் இடம். ஆனதால் மனிதர்களிடத்தில் அந்தர்யாமியாயுள்ள கடவுளுக்கு நாராயணர் என்று பெயராம். ஆதலால் மனிதரைக் கும்பிடும்போது, ஓம் நமோ நாராயணுய என்று சொல்லிக் கும்பிடவேண்டும். மேலும் மனிதர்களுடைய இருதயமென்னும் தசைத்துண்டத்தின் நடு மத்தியில் சிறிது இடைவெளியுள்ளது. இதுவே சிதாகாசமென்றும் சிதம்பரமென்றும் சொல்லப்படுகின்றது. இந்த இடத்தில் சிறிது தண்ணீர் இருக்கின்றது. இந்த ஜலத்திற்கு நாரம் எனப் பெயராம். இந்த நாரமே திருப்பாற்கடல் என்று சொல்லப்படுகின்றது. அந்த நாரமாகிய இடத்தில் இருப்பதனுல் அங்குள்ள நடராஜர் எனப்படும் கடவுளுக்கே நாராயணர் எனப் பெயராம். ஆதலால் நாம் ஒரு மனிதரை

ஓம் நமோ நாராயணாய என்று சொல்லிக் கும்பிடும் போது மனிதனின் இருதய கமலத்தில் வீற்றிருக்கும் இறைவனுக்கு நமஸ்காரம் என்று அர்த்தமாகிறது. இப்படியே ஒவ்வொருவரும் சந்நியாசிகளையாவது, பெரியோர்களையாவது, நண்பர்களையாவது காணும்போது இந்த அஷ்டாக்ஷரத்தைச் சொல்லிக் கும்பிட்டு அவர்களை மகிழ்ச்சியடையச் செய்வதோடு இறைவன் அருளையும்பெற்று இன்பநிலையெய்துவார்களாக.

ஓம் தத் ஸத்.

**ஓம் நமோ நாராயணாய.**



நாடார் பிரஸ் லிமிட்டெட், சிவகாசி:—1948.

# சிவானந்த சாதன வெளியீடுகள்.



| | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| பிரஸ்னோத்தரி பகவத்கீதை (பதவுரையுடன்) | | | |
| முதல் அத்தியாயம் | 0 | 4 | 0 |
| இரண்டாவது அத்தியாயம் | 0 | 6 | 0 |
| பன்னிரண்டாவது அத்தியாயம் | 0 | 2 | 6 |
| தூய சிந்தைக் களஞ்சியம் | 0 | 2 | 0 |
| அருளுரைகள் | 0 | 2 | 0 |
| கீர்த்தனை மாலை | 0 | 2 | 0 |
| சிவானந்த சாதன நிலயம் | இனாம் | | |
| தென்னிந்தியத் தலைமைத் தெய்வநெறிக்கழகம் | இனாம் | | |
| ப்ராத: ஸ்மரண ஸ்தோத்திரம் | 0 | 0 | 6 |
| பிரஸ்னோத்தரி பகவத்கீதை தமிழ் வசனநடை $1\frac{1}{2}$ அத்தியாயம் | 0 | 3 | 0 |
| தோசாரத்தாலாட்டு (வரலாற்றுடன்) | 0 | 4 | 0 |
| ஸ்ரீ அஷ்டாக்ஷர தீபம் | 0 | 2 | 6 |

